ஒரு காலனியில் தப்பித் தவறி, ஹரிஜனங்கள் இல்லாதார் ஒன்றிரண்டுபேர் இருந்து விட்டால் அங்கு இது கிடைக்கும் வாய்ப்புப் போய்விடுகிறது. ஆகவே, இத்தனை விகிதாசாரம் ஹரிஜனங்கள் உள்ள இடங்களை ஹரிஜன காலனி என்று வகுக்க அரசாங்கம் விதி செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது இருப்பது, வருடம் ஒன்றுக்கு 1½ லட்சம் ரூபாய் ஒதுக்குகிறோம். அதற்கு தகுந்தபடி பார்த்து செலவு செய்யவேண்டியிருக்கிறது.

SRI M. JAGANNATHAN : ஹரிஜன காலனிகளுக்கு மின்சார விளக்கு கள் போடவேண்டுமென்று ஒதுக்கப்பட்ட இந்த தொகை முனிசிபாலிட்டி களில் உள்ள ஹரிஜன காலனிகளுக்கும் செலவிடப்படுகிறதா ?

THE HON. SRI P. KAKKAN : தற்சமயம் செலவழிக்கப்படவில்லை.

*Bifurcation of districts*

11-30 a.m. * 689 *Q.*—SRI K. VINAYAKAM, SRI S. LAZAR, SRI M. P. SARATHI AND SRI S. M. ANNAMALAI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether there is any proposal with the Government to bifurcate the districts in the State ; and

(*b*) if so, the considerations for so splitting up of the districts?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) There is no proposal to alter the limits of the districts as they exist now. The Government have however decided to introduce a scheme of appointing Additional Collectors in stages in all the heavier districts in the State. This is with a view to give relief to the Collectors of these districts to enable them to devote intensive attention to developmental work. Under this scheme, roughly and half of the existing revenue district will be administered by the Additional Collector with full responsibility for law and order and all developmental work. The implementation of the scheme is under examination in consultation with the Special Officer and the Board of Revenue.

MR. SPEAKER : The hon. Members, Sri Lazar, Sri M. P. Sarathi and Sri S. M. Annamalai also have given notice of the same question and so they will be given preference if they want to put supplementary questions.

SRI S. M. ANNAMALAI : ஸார், வடார்காடு மாவட்டம் பெரிய மாவட்டம். திருவண்ணமலையிலிருந்து வேலூர் வரையில் பார்த்தால் 50 மைல் தூரம் இருக்கிறது. இதனால் நிர்வாகத்துறையில் பல கஷ்டங் கள் ஏற்படுகின்றன. ஆகவே இதை உடனடியாக இரண்டாகப் பிரித்து பிரிக்கப்பட்ட மாவட்டத்திற்கு போளூரை தலைநகரமாக நிர்ணயித்து அமைப்பதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : தலைநகர் விஷயம் இப்போது எழவில்லை. வடார்காடு ஜில்லாவில் நிர்வாகத்துறையில் மற்ற ஜில்லாக் களைப்போல் அவ்வளவு கஷ்டமில்லை என்று தான் நான் நம்புகிறேன். தலைநகர் நிர்ணயிக்கிற விஷயம் அதற்குரிய காலம் வரும்போது பார்த்துக் கொள்ளலாம்.

29th October 1958]

SRI K. VINAYAKAM : Is there not a proposal under the consideration of the Government to change the boundaries of districts by bifurcating them or splitting bigger districts into smaller districts so as to be in conformity with the efficiency of the office work carried on by officials in the districts?

THE HON. SRI M. A. MANICKAVELU : The proposal is to bifurcate, in the first instance, four districts into two each so as to have more efficient administration of the districts.

SRI S. LAZAR : ஸார், இந்த பிரிவு ரெவன்யூ இலாகாவில் மட்டும் நடைபெறப்போகிறதா அல்லது நீதி இலாகா போன்றவைகளிலும் பிரிவு ஏற்படப்போகிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது கலெக்டர்கள் இடத்தில் கூடுதலாக ஒரு கலெக்டர் நியமிக்கப்படவேண்டியிருக்கும். கனம் அங்கத்தினர் அவர்கள் "அட்வகேட்" அங்கத்தினர் ஆவார். ஆகவே நீதி இலாகாவில் இதன் மூலம் பிரிவு ஏற்படுமா என்பதை நான் சொல்ல வேண்டியதில்லை.

SRI M. KALYANASUNDARAM : ஸார், அமைச்சர் அவர்கள் இப்போது நான்கு ஜில்லாக்களை மட்டும் பிரிக்கப்போவதாக தெரிவித்தார்கள் முதலில். இது ஒரு ஆரம்ப நடவடிக்கை என்று நினைக்கிறேன். இவ்விதம் இந்த விஷயத்தில் ஒரு முடிவு எடுப்பதற்கு முன்னால் சட்டசபை அங்கத்தினர்களையும் கலந்து ஆலோசனை செய்வார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது இந்த விஷயத்தில் செய்யவேண்டிய பரிசீலனை போர்ட் ஆப் ரெவன்யூ-வினிடமும் ஸ்பெஷல் ஆபீஸரிடமும் இருந்து வருகிறது. அவர்களுடைய ரிப்போர்ட் எவ்விதமிருக்கிறது என்பதைப் பார்த்து அதன் பிறபாடு கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லுவதைப்பற்றி ஆலோசிக்கலாம்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : ஸார், ஜில்லாக்களில் பெரிய ஜில்லாக்களாக இருக்கும் இடங்களில் நிர்வாகத்துறையில் பல கஷ்டங்கள் ஏற்படுவதால் அந்த ஜில்லாக்களை இரண்டாக பிரிக்கப்போவதாகத் தெரிகிறது. அதேமுறையில் எல்லா டிப்பார்ட்மெண்டுகளின் தலைமை ஆபீஸ்களும் சென்னை நகரத்திலேயே இருந்து வருவதால் பலவிதமான கஷ்டங்கள் இருந்து கொண்டிருக்கின்றன. அதோடு இந்த தலைமை காரியாலயங்களில் வேலை செய்கின்றவர்களும் பலவிதமான கஷ்டங்கள் அடைகிறார்கள். ஆகவே இவைகளிலும் தனியாக பிரிவு செய்து ஒவ்வொரு ஜில்லா தலை நகரிலும் ஏற்படுத்துவதற்கு அரசாங்கம் யோசனை செய்யுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : சென்னை விஷயம் வேறு, ஜில்லாக்கள் விஷயம் வேறு. சென்னை விஷயத்தைப்பற்றி பின்னால் வேறு விதமான ஏற்பாடு செய்யவேண்டியிருந்தால் அப்போது கவனித்துக்கொள்ளலாம்.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், ஜில்லாக்கள் இப்போது எந்த நோக்கத்தோடு பிரிக்கப்படவேண்டும் என்று சொல்லுகிறோமோ அதே நோக்கத்தோடு தாலூகாக்களையும் பிரிப்பதற்கு அரசாங்கம் முன் வருமா ? அதாவது இரண்டு லட்சம் ஜனத்தொகைக்கு மேற்பட்டு இருக்கும் தாலூகாக்களை இரண்டாக பிரிப்பதற்கு சர்க்கார் முன் வருமா ?

MR. SPEAKER : The hon. Member must ask a separate question. If the Hon. Minister is prepared to answer it, I have no objection.

[29th October 1958

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்படி செய்ய வேண்டிய அவசியம் இல்லை என்று நினைக்கிறேன்.

SRI T. KARIA GOUNDER : கனம் அமைச்சர் அவர்கள் வடார்காடு ஜில்லாவில் நிர்வாகத்துறையில் அதிகமான வேலை இல்லை என்று சொன்னார்கள். அதற்கு காரணம் என்ன என்பதை விளக்குவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கோயம்புத்தூர், சேலம், தஞ்சாவூர் போன்ற ஜில்லாக்களை எடுத்து ஒப்பிட்டுப்பார்த்தால் வடார்காடு ஜில்லாவில் அவ்வளவு அதிகமான வேலை கிடையாது என்ற நினைப்பில் தான் அவ்விதம் தெரிவித்தேன்.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, ஜில்லாக்களை இரண்டாக பிரிப்பது என்ற கொள்கையை எடுத்துக்கொள்ளும்போது இப்போது ஒன்றிரண்டு ஜில்லாக்களை மட்டும் பிரிவு செய்யவேண்டும் என்பதை மாற்றி பொதுவாக எல்லா ஜில்லாக்களையுமே மாற்றி அமைக்க வேண்டிய ஆலோசனை செய்து அதற்கான தக்க ஒரு கொள்கையை கொண்டு வர அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது அரசாங்கம் முன் வந்திருப்பது இப்போது இருக்கின்ற சில ஜில்லாக்களில் இரண்டாகப் பிரிவு செய்யவேண்டும் என்பதுதான். ஒவ்வொரு ஜில்லாக்களையும் எடுத்து பிரிவு செய்யவேண்டும் என்றால் இன்னும் அதிகமான தொந்தரவு தான் ஏற்படும் என்று நினைக்கிறேன்.

### *Harijan Welfare Schools*

*690 *Q*.—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை நகரசபை எல்லைக்குள் எத்தனை ஹரிஜன நலப் பள்ளிகள் நடத்தப்படுகின்றன ?

(ஆ) அவைகளில் வேலை செய்யும் ஆசிரியர்கள், ஆசிரியைகள் எத்தனை பேர் ?

(இ) அவர்களில் கிருஸ்தவர்கள், பிற்பட்ட வகுப்பினர், ஹரிஜன வகுப்பினர் எத்தனை பேர் ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Five.

| | | |
|---|---|---|
| (*b*) | Male teachers .. .. .. .. .. | 15 |
| | Female teachers .. .. .. .. | 37 |
| (*c*) | Christian Harijan Converts .. .. .. | 20 |
| | Non-Harijan Converts .. .. | 7 |
| | Backward and Other Communities .. | 9 |
| | Harijans .. .. .. .. .. | 16 |
| | Total .. | 52 |

SRI M. C. MUTHUKUMARASWAMY : ஸார், இந்த ஹரிஜன வெல்பெயர் டிப்பார்ட்மெண்டு என்று மாற்றுவதற்கு முன்னால் லேபர் டிப்பார்டுமெண்ட் என்ற பெயர் இருந்தது. எல்லாதுறைகளிலும் ஹரிஜனங்கள் முன்னேற வேண்டும் என்ற நோக்கத்தோடு இந்த துறை ஏற்படுத்தப்பட்டது. அந்நோக்கம் நிறைவேறுமுன் மேற்படி துறையில் மற்ற சமூகத்தினர்களைப் புகுத்துவது ஏன்?